மென் றடிதொழுதனன். அஞ்ஞான்று விவேகபூரணசாரியர் விளம்பலுற்றனர். அன்ப! நினதெண்ணப்படி முடியவும் எமதெண்ணப்படி யாகவுங் கடாக்ஷித்தருள்பவன் சுப்பிர மணியமெனும் எம்பிரானகிய தம்பிரானே நின் பிரானுமாம். அவ்வம்பிரானை யுபாசிப்பதற் காறெழுத்தென்னுஞ் சடக்கரமலுவு முண்டு. அதனை விதி ஆளியா யுச்சரிக்கப் பாசநீங்கிப் பரிபூரணம் பிறக்கு மென்றல் சத்தியம். இதில், நின்கருத் தியாதோ? கூறுதி என்றனர். அதுகேட்ட சீடன், பின்வருமாறு கடாவுகின்றனன்—

(க)

சீடன்.—சுப்பிரமணியமென்ப தென்ன?

குரு.—ஆதியாயு மனாதியாயுமுள்ள பரம்பொருள்.

(உ)

சீடன்.—அது தானே ஸ்காந்தபுராணத்திற் காணப்படுகின்ற அசுர குலாந்தக மூர்த்தி?

குரு.—ஆம். அதுவுமொரு தருணமே.

(ங)

சீடன்.—அவர் தந்தை தாயென்பார் யாவர்?

குரு.—பரமேசுரர் பார்வதியாவர். அந்தப்பரமேசுரர் யாரெனின்,— அனந்தங்கோடி கணதிபர்கட் கதிபரான காலாக்கினிருத்திரரும், பத்திலக்ஷங்கோடி கணதிபர்கட் கதிபரான ஹாடகேசுர ருத்திரரும், கோடி கோடி கணங்கட் கதிபரான கிருச்மாண்டரும், பத்துக் கோடி கோடி கணங்கட் கதிபரான இரக்தவர்ணரும், ஆயிரங்கோடி கோடி கணங்கட்: கதிபரான கேசராக்ஷ